ஓம்
சிவமயம்:

# தமிழ்நாட்டுத் துறவிகள்

 சங்க 

# மூன்றாவது மாநாடு.





நிகழ்விடம் :

**சத்திவிலாச சபா மண்டபம்**
**அண்ணாமலைநாதர் கோவில்**
**திருவண்ணாமலை.**

நிகழ்நாள் :

சருவசித்து-ஆண்டு கார்த்திகைத்-திங்கள்
11ம்-நாள் - 26—11—47
புதன்கிழமை.

ஓம்.
சிவமயம்.

# தமிழ் நாட்டிலுள்ள ஆதீனங்கள், மடங்களின் தலைவர்கட்கும் துறவிகட்கும் சமயப்பற்றுள்ள ஏனைய பெரியோர்கட்கும் எனது வேண்டுகோள்.

தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம் என்ற இச்சங்கம் தோன்றி மூன்றாண்டுகளாகின்றன. அண்ணாமலைநாதர் திருவருளால் சங்கம் மெல்ல வளர்ந்து வருகிறது. மூவாண்டின் உலகுய்யச் சிவஞான முண்ட திருஞான சம்பந்தர் ஆதீனம் நமதுசங்கத்தின் மூன்றாவது மாநாட்டிற்கு ஒரு தலைவரைக்கொடுத்துதவியது. சமய வளர்ச்சிக் குரிய பணிகளில் துறவிகளை ஈடுபடுத்தவும் துறவிகளின் பெருமை யையும் வரம்பையும் பாதுகாக்கவும் தலையிடக்கூடாத இடங்களில் அரசாங்கத்தார் தலையிட விரும்புவதைத்தடுக்கவும் சங்கம் தொடங் கப்பட்டதென்பதைச் சங்க நோக்கங்களின்மூலம் அறியலாம். தமிழ்நாட்டின் பலபகுதிகளிலும் வாழும் துறவிகள் அனைவரையும் நேரே சென்று கண்டு இச்சங்க நிலைமையை அறிவிக்க எளியேனுக் குப் போதியகாலவசதியில்லை. பொருள்வசதியும் இல்லை. அப்படி யிருந்தும் பெருவாரியாகத் துறவிகளும், மடாதிபதிகளும் தாங்க ளாகவே சேர்ந்து இச்சங்க வளர்ச்சியில் கவனம்செலுத்தி வருகி றார்கள். இதுவரை 220 துறவிகள் உறுப்பினராகச் சேர்ந்துள்ளார் கள். குறிப்பாக தருமபுர ஆதீனம் **மௌன சோமசுந்தரத்தம்பிரான் சுவாமிகள்**, திருவண்ணாமலை ஈசானிய மடம் **நடேச சுவாமிகள்**, மதுரை திருஞான சம்பந்தர் ஆதீனம் **மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள்**, திருப்போரூர் **சிதம்பர சுவாமிகள் மடாலயம் சிதம்பர சண்முக சுவாமிகள்**, மதுரை பிர்மானந்த சுவாமிகள் மடம் **சோமசுந்தரசுவாமிகள்**, சென்னை வீர சுப்பையா சுவாமிகள் மடம் **அனந்தானந்தசுவாமிகள்**, திருவாரூர் தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடம் **சண்முகானந்தசுவாமிகள்** சிதம்பரம் மௌனசுவாமி மடம், **சபாபதி சுவாமிகள்** சென்னை அகத்திய குரு குலம், சாது நாராயண தேசிகர் நிலயம் **ஞானானந்தமணவாளசுவாமிகள்** வியாசர்பாடி கரபாத்திர சிவப்பிரகாச சுவாமிகள் மடம் **முத்தானந்த சுவாமிகள்**, காஞ்சீவரம் நாராயண சேவாச்ரமம் **ஆத்மானந்தசுவாமிகள்** ராமநாதபுரம் ஆனந்தாச்ரமம் **ராமானந்த சரசுவதி சுவாமிகள்**, தில்லை யாடிவிவேகானந்தாச்ரமம் **சாது சங்கரானந்தா பி. ஏ**, சித்தூர் ஏர்ரே பல்லி ஆனந்தாச்சிரமம் **சாந்தானந்தசுவாமிகள்**, திருவண்ணாமலைபவழக் குன்றுமடம் **வேலாயுத சுவாமிகள்**, தென்காசி சமரச சன்மார்க்க சங்கம் **சுகானந்த சுவாமிகள்**, வேதாரண்யம் சாதுக்கள் மடம் **மகேசு ரானந்தகிரி சுவாமிகள்**, காஞ்சீவரம் மெய்கண்டார் கழக ஆசிரியர் **பொன் குமாரசாமி அடிகள்**, கோயம்புத்தூர் பேட்டை ஈசுரன் கோயில்

நமச்சிவாய சுவாமிகள் முதலிய தகுதிவாய்ந்த துறவிகள் பலரும் நமது சங்கத்தில் சேர்ந்து சிறப்பித்துவருகிறார்கள்.

துறவிகளின் ஒத்துழைப்பும் மடாதிபதிகளின் ஆதரவும் இல்லையேல் சங்கம் ஒன்றும் செய்ய இயலாதென்பது எல்லோரும் அறிந்ததே. முன்னரே தெரிவித்தபடி பொருள் வசதி காலவசதியின்மையால் ஒவ்வொருவரையும் நேரே வந்து பார்த்துத்தெரிவித்துக்கொள்ள இயலாத நிலையிலுள்ளேன். துறவிகள் சங்கத்தை வளர்த்து வலிமை வாய்ந்ததாகச் செய்யவேண்டுமென்று எனது உள்ளமும், சொல்லும், செயலும் ஒன்றை யொன்று முந்திக்கொண்டுவிரைகின்றன. ஆனால் உங்களுடைய ஆதரவு அவ்வளவு விரைவிற் கிடைக்கப்பெறாமையால் ஆமையினும் மெல்ல நகரவேண்டியவனாக இருக்கின்றேன். ஆதலால் இந்த அறிக்கையைக் காணும் ஒவ்வொருவரும் வேறு துறவிகளைக் காணும்போது அவர்கட்கும் இவ்வறிக்கையைக் காண்பித்து அவர்களையும் சங்கத்தின் உறுப்பினராகச் சேர்த்தால் சங்கம் விரைந்து வளரும். தமிழ் மக்கள் சமய நல்லொழுக்கத்தில் சிறக்க வேண்டுமானால், நாடெங்கும் பரவிவரும் துறவிகளைப்பற்றிய நிந்தனை நீங்கவேண்டுமானால், ஆலயங்கள் அறநிலையங்கள் துறவு நிலையங்கள் இவற்றில் அரசாங்கத்தின் தலையீடு நீங்கவேண்டுமானால் தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கத்தில் சேர்ந்து ஆக்கவேலைத் திட்டங்களை உடனே நடைமுறைக்குக்கொண்டுவரவேண்டுமென்று தமிழ் நாட்டுத் துறவிகளாகிய உங்கள் அனைவரையும் பன்முறையும் பணிந்து கேட்டுக்கொள்ளுகிறேன் இதுவரை சங்கம் வளர உதவிவரும் துறவிகள் மடாதிபதிகள் ஏனைய பெரியோர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியறிதல் உரியது.

இங்ஙனம்,

202. திருவொற்றியூர் ஹைரோடு சென்னை.

**சுவாமி அருணகிரிநாதன்,**
சங்கச்செயலாளர்.

# விஞ்ஞாபனம்.

தமிழ் நாட்டுத் துறவிகள் சங்கம் தோன்றி மூன்றாண்டுகளாகி விட்டபடியால் தமிழ் நாட்டிலுள்ள துறவிகளனைவரும் இச்சங்கத்தைப்பற்றி அறிந்திருக்கலாமென்று நினைக்கிறேன். சமயவளர்ச்சி, துறவிகளின் நன்மை, ஆதீனங்கள் மடாலயங்களின் நன்மை என்ற இவற்றை நோக்கமாகக்கொண்டு சங்கம் தொடங்கப்பட்டது பொதுமக்கள் துறவிகளைப் போற்றிப்பாதுகாக்க வேண்டியதற்கு மாறாக எங்கும் துறவிகளை நிந்தனைசெய்து வருகின்றனர். அதனைக் காரணமாக வைத்துக்கொண்டு மடங்களின் நிர்வாகத்தில் அரசாங்

கத்தார் தலையிட முயன்றுவருவதை உலகம் அறியும். இந்த நிலைமையில் துறவிகள் தவவொழுக்கத்தினால் தங்கள் பெருமையை வெளிப்படுத்திச் சமயப் பிரசாரம் செய்து பொதுமக்களின் நல்லெண்ணத்தைப்பெறவும், அரசாங்கத்தின் தலையிட்டிலிருந்து ஆதீனங்கள் மடாலயங்களை நீக்கிக்கொள்ளவும் துறவிகள் சங்கத்தின் மூலம் பெருமுயற்சிசெய்ய வேண்டியிருக்கிறது. இதனைச்சிந்தித்துப் பார்த்து ஆதீனத்தலைவர்களும், மடாதிபதிகளும், துறவிகளும் ஒன்றுசேர்ந்து இச்சங்கத்தை வலிமைவாய்ந்ததாக ஆக்கினால் அதன்மூலம் தற்கால விபரீதப்போக்கிலிருந்து நம்மையும் விடுவித்துக்கொண்டு உலகத்தாரையும் விடுவித்தவர்களாவோம். ஆதலால் துறவிகள் அனைவரும் இச் சங்கத்தில் உறுப்பினராகச் சேர்வதோடு எல்லா வகையாலும் சங்க நோக்கங்கள் ஈடேற ஒத்துழைக்குமாறு விஞ்ஞாபித்துக்கொள்கின்றேன்.

இப்படிக்கு,
**நடேச சுவாமி**
ஈசானிய மடம்.

திருவண்ணாமலை
9—12—47.

# தமிழ்நாட்டுத் துறவிகள் சங்கத்தின் மூன்றாவது மாநாட்டின்

# நிகழ்ச்சியும் தீர்மானங்களும்

நிகழும் சருவசித்து ஆண்டு கார்த்திகைத் திங்கள் 11 ஆம் நாள் (26—11—1947) புதன்கிழமை திருவண்ணாமலை அண்ணாமலை நாதர் கோவிலினுள்ளமைந்த சத்திவிலாச சபா மண்டபத்தில், **தவத்திரு மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள்** தலைமையில் தமிழ்நாட்டுத் துறவிகள் சங்க மூன்றாவது மாநாடு நடைபெற்றது. இம்மாநாட்டிற்குத் தமிழ்நாட்டின் பல பகுதிகளிலிருந்தும் துறவிகள் பலரும், துறவிகளைப்போற்றும் ஏனைய பெரியோர்களுமாக சுமார் இரண்டாயிரம் மக்கள்வரை வந்து குழுமியிருந்தார்கள். துறவிகள் திருக்கூட்ட ஊர்வலம் காலை 8-மணிக்குமேல் சாதுக்கள் சத்திரத்திலிருந்து கோயில்யானை, விருது, கொடிகள் பாண்டு மேளவாத்தியம் முதலிய சிறப்புகளுடன் சாதுக்கள் தமிழ் மறை ஓதிவர மாடவீதியை வலமாகவந்து சத்திவிலாச சபாமண்டபத்துட் சென்று மாநாடு தொடங்கப்பெற்றது.

## மாநாட்டு நிகழ்ச்சிகள்.

காஞ்சீவரம், திருநெறித்தமிழிசைவேந்தர் **திரு பு. ஆ. விநாயக முதலியார்** அவர்கள் தமிழ்மறை ஓதிக் கடவுள் வணக்கஞ் செய்தார்கள்.

பெருஞ்சோற்கொண்டல் புரிசைகிழார் சு. முருகேச முதலியார் அவர்கள் துறவிகளின் பெருமையைக்கூறித் திறப்புரை செய்தார்கள்.

பின்னர், சுவாமி **அருணகிரிநாதர்** முன் மொழியவும் சுவாமி **முத்தானந்தா** வழிமொழியவும் தலைவர் தவத்திரு **மாணிக்கவாசகத்தம்பிரான்** சுவாமிகள் மாநாட்டின் தலைமை வகித்துத் தலைமை யுரை யாற்றினார்கள்.

சங்கச் செயலாளர் அவர்களால் ஆண்டறிக்கை படிக்கப்பெற்றபின், துறவிகள் சங்கத்தின் பணி, அடியார் பெருமை, துறவிகளும் கடவுளும், கடமை, துறவிகள் சங்கம் வேண்டுமா என்ற பொருள்களைப்பற்றி முறையே சுவாமி முத்தானந்தா பொன். குமாரசாமி அடிகள் ராமானந்த சரசுவதி சுவாமிகள் சாந்தானந்தா சபாபதி சுவாமிகள் என்ற இவர்கள் பேசியபின் தலைவரவர்கள் முடிவுரை கூறினார்கள். பின்னர், கீழ்க்கண்ட சங்கவிதி முறைகளும், தீர்மானங்களும் மாநாட்டினரால் ஒருமனதாக ஒப்புக் கொள்ளப்பட்டு நிறைவேறின.

இதுவரை நடந்த நடைமுறைகளை ஒப்புக்கொள்வதோடு, இனி சீர்திருத்தியமைத்துக் கீழே குறித்துள்ள விதிமுறைப்படி சங்கம் நடைபெறவேண்டுமென மாநாடு ஒருமனதாகத் தீர்மானிக்கிறது.

## சங்க விதிமுறைகள்.

**1. பெயர்.** தமிழ்நாட்டுத்துறவிகள் சங்கம் என்பது சங்கத்தின் பெயராகும்.

**2 எல்லை.** குமரிமுதல் வேங்கடம்வரையும் மற்றும் எங்குமுள்ள தமிழர்களிடையே தனது கடமையைச் சங்கம்செய்துவரும்

**3. உறுப்பினர்.** ஏதாவதொரு நிலையான துறவு நிலையத்தில் யாராவது ஒரு பெரியவர் பரம்பரையைச் சேர்ந்தவரென அந்த நிலையத்தின் தலைவரால் ஒப்புக்கொள்ளப்பட்டவரே சங்கத்தில் உறுப்பினராதற்குரியவர்.

அப்படிச் சேராதவர்கள் பத்திமார்க்கத்திலோ யோகமார்க்கத்திலோ, ஞானமார்க்கத்திலோ நின்று இன்ன இடத்தில் இன்ன முறையில் தன்கடமையைச் செய்கிறேனென்றுநிரூபித்த பின்னர் சங்கச்செயற் குழுவினர் ஆலோசித்துச் சேர்த்துக்கொள்ளலாம்.

**4. செயற்குழு.** பதினைந்துபேரைக் கொண்ட செயற்குழுவினரால் சங்கம் இயங்குவதாகும்.

62-5



தலைவர், துணைத்தலைவர்கள், பொருளாளர், அமைப்பாளர், செயலாளர்கள், குழுவினர் என்ற அங்கங்களால் செயற்குழு அமையும்.

ஆண்டிற்கொருமுறை செயற்குழுவின் தேர்தல் நடைபெற வேண்டும்.

## சங்க நோக்கம்.

1 துறவு நிலையின் பெருமையினையும், துறவியின் வரம்பையும் பாதுகாத்தல்.

2 சமய நல்லொழுக்கத்தில் நாட்டு மக்களை நிலைநிறுத்தும் வகையில் பாடுபடும்படி துறவிகளை ஊக்குதல்.

3 துறவு நிலையங்கள், ஆலயங்கள், அற நிலையங்கள் இவற்றின்மீது நேரான ஆதிக்கம் செலுத்துவதன் மூலம் இதுவரை எந்த ஆட்சியிலும் இல்லாத செயலாகத் தமிழர் சமய உரிமையைப் பறிக்க அரசாங்கம் முயன்றுவருவதைத் தடுத்தல்

## இந்த நோக்கங்களை நிறைவேற்றச் சங்கம் மேற்கொள்ளவேண்டிய செயல்முறைகள்

1 துறவின் நோக்கம், பெருமை, பயன் இவற்றோடு சமய உண்மைகளையும், பொதுநலப் பணிகளையும், விளக்க ஒரு வெளியீடு தொடங்குதல்.

2 தமிழகத்தின் எல்லாப் பகுதிகட்கும் சென்று சிற்றூர்களிலும் நகரங்களிலும் தங்கி ஆங்காங்கு வாழும் மக்கட்குக் கல்வி கற்பித்தல், மருத்துவஞ் செய்தல், சமய போதனை செய்தல், கோவில் மடங்களில் பூசனை தொண்டு முதலிய செய்தல் இவற்றிற்குத் தகுதியுடைய துறவிகளைத் தேர்ந்தெடுத்து நியமித்தல்

3 தமிழ்நாட்டிலுள்ள துறவிகளையும், துறவு நிலையங்களையும் பற்றிய வரலாறு தயாரித்தல்

4 சமய சம்பந்தமாகவோ, சமய நிலையங்கள் சம்பந்தமாகவோ அரசாங்கத்தார் தலையிடும்போது துறவிகள் சங்கத்தின் ஆலோசனையைக் கேட்கவேண்டுமென்று அரசாங்கத்தாரைக் கேட்டுக்கொள்ளுதல்.

5 **சங்கவருவாய்.** உறுப்பினர் கட்டணம், புரவலர் கட்டணம், நன்கொடை என்ற இவைகளே சங்கத்தின் வருவாய். உறுப்பினர்கட்டணம் ஆண்டுக்கு ஒருரூபாயாகும்.

ஒருமுறையில் ரூபா இருபத்தைந்து செலுத்துவோர் ஆயுட்சந்தாதாரராவார்.

ஒருமுறையில் நூறுரூபாய் செலுத்துவோர் துறவியாயினும், அல்லாதவராயினும் சங்கத்தின் புரவலராவார்.

அதற்குக் (நூறு) குறைந்த தொகையாகக் கொடுக்கப் படுவன எல்லாம் நன்கொடையாக ஏற்றுக்கொள்ளப்படும்.

**6 பொருட்காப்பு** ஐம்பது ரூபாய்க்கு மேற்படாமல் செயலாளரிடம் இருக்கலாம்.

எஞ்சிய தொகையைப் பொருளாளர் ஸேவிங்ஸ் பேங்கில் போட்டுக் கணக்கு வைத்துக்கொள்ளவேண்டியது.

செயலாளர் வேண்டும்போது சங்கச் செயல்முறைகளின் செலவுத்தொகையைப் பொருளாளர் கொடுக்க வேண்டியது.

**குறிப்பு:—சங்கச் செயற்குழுவின் கூட்டம் நடைபெறும்போது துறவிகளைத் தவிர பிறர் யாரும் கலந்துகொள்ளுவதற்கு உரிமையில்லை.**

## சங்க விதிமுறைகள் மூன்றுவது பிரிவில் ;

பக்திமார்க்கம்என்பது, ஆலயப்பணி, அடியார்பணி, தெய்வ வழிபாடு, தோத்திர பாராயணம், புராணம் கேட்டல், கேட்பித்தல், என்ற இவற்றைக் குறிப்பதாகும்.

யோகமார்க்கம் என்பது மலைச்சாரலிலோ, நதிக்கரையிலோ, தனிஇடத்திலோ அமர்ந்து இயம நியமாதிகளைப் பயில்வதைக் குறிப்பதாகும்.

ஞானமார்க்கம் என்பது ஞானநூல்களைப் பாடம்சொல்லுதல் அல்லது கேட்டலோடு சிந்தித்தல் தெளிதலையும் குறிப்பதாகும்.

## சங்கச் செயற் குழுவினர்.

**தலைவர் :**

**தவத்திரு. மாணிக்கவாசகத் தம்பிரான் சுவாமிகள்,**
திருஞான சம்பந்தர் ஆதீனம், மதுரை.

**துணைத்தலைவர்கள் ;**

**தவத்திரு. நடேச சுவாமிகள்,** ஈசானிய மடம், திருவண்ணமலை.
,, **சாது சங்கரானந்தா B. A.,**
விவேகானந்தா ஆச்ரமம், தில்லையாடி.

பொருளாளர்:

**தவத்திரு. முத்தானந்த அடிகள்,**
*சங்கமூர்த்தி ஆனந்தாச்சிரமம், வியாசர்பாடி சென்னை.*

அமைப்பாளர்: (Organaiser)

**தவத்திரு: மௌன சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்,**
*கட்டளை, வைத்தீசுவரன் கோவில், தருமபுர ஆதீனம்.*

செயலாளர்:

**தவத்திரு. சுவாமி அருணகிரிநாதர்,** *அகத்திய குருகுலம்*
*சாது நாராயண தேசிகர் நிலையம், சென்னை.*

துணைச்செயலாளர்;

**தவத்திரு. சொருபானந்த சுவாமி,**
*ஈசானிய மடம், திருவண்ணாமலை.*

## குழுவினர்.

**தவத்திரு. சபாபதி சுவாமிகள்,** *மௌனசுவாமிகள் மடம், சிதம்பரம்.*

,, **வி. ர. சு. சண்முகானந்த சுவாமிகள்,**
*தக்ஷிணாமூர்த்தி சுவாமிகள் மடம், திருவாரூர்.*

,, **சாந்தானந்த சுவாமிகள்,**
*ஆனந்தாச்ரமம் எர்ரேபல்லி சித்தூர்.*

,, **வேலாயுத சுவாமிகள்,**
*பவழக்குன்று மடம், திருவண்ணாமலை.*

,, **கைவல்ய ராமானந்த சரசுவதி சுவாமிகள்,**
*ஆனந்தாச்சிரமம், ராமநாதபுரம்.*

,, **நமச்சிவாய சுவாமிகள்,** *பேட்டை ஈசுரன் கோவில் கோயம்புத்தூர்.*

,, **சுகானந்த சுவாமிகள்,**
*சமரச சன்மார்க்க சங்கம், கெடுவயல் தென்காசி.*

,, **பொன் குமாரசுவாமி அடிகள்,**
*மெய்கண்டார் கழக ஆசிரியர், காஞ்சீவரம்.*

## தீர்மானங்கள்.

1 *இந்தியநாடு விடுதலையடைந்து உலகம் போற்றத் தக்க திறமை வாய்ந்த இந்தியத்தலைவர்களிடம் நாட்டாட்சி வந்தது பற்றி இம்மாநாடு உண்மையான மகிழ்ச்சியை அடைகிறது.*

2 தகாத தலைமையால் மதவெறியூட்டப்பட்ட குண்டர்களால் தாக்கப்பட்டு உயிரிழந்தும், மானமிழந்தும், பொருளிழந்தும். துன்பப்பட்ட இலட்சக்கணக்கான மக்களின் வேதனையை இம்மாநாடு நெஞ்சுருகி நினைப்பதோடு, அவதியுற்ற மக்கட்கெல்லாம் ஆறுதல் தருமாறு ஆண்டவன் திருவருளைப் பிரார்த்திக்கின்றது

3 மொழிவாரியாக மாகாணங்கள் பிரிக்கப்படவேண்டுமென்ற கொள்கையை இம்மாநாடு ஒப்புக்கொள்வதோடு எவ்வளவு விரைவில் அப்பிரிவினையைச்செய்து முடிக்க முடியுமோ அவ்வளவு விரைவில் செய்துமுடிக்கவேண்டுமெனச் சென்னை அரசாங்கத்தையும், மத்திய அரசாங்கத்தையும் இம்மாநாடு வேண்டிக்கொள்கிறது

4. துறவுநிலையங்கள், ஆலயங்கள், அறநிலையங்கள் இவற்றின்மீது நேரான ஆதிக்கம் செலுத்துவதன்மூலம், இதுவரை எந்த ஆட்சியிலும் கண்டிராத முறையில் சமய உரிமைகளைப் பறிக்கவும், சமய வளர்ச்சிக்காக அளிக்கப்பட்ட பொருள்களைச் சமய சம்பந்தமல்லாத பொதுத்துறைகளுக்குப் பங்கிடவும் சென்னை அரசாங்கம் முனைந்து முயன்று வருவதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிப்பதோடு அம்முயற்சியில் தீர ஆலோசித்துத் தெய்வ சம்மதமான முறையில் தலையிடுமாறு சென்னை அரசாங்கத்தை இம்மாநாடு கேட்டுக்கொள்கிறது.

வாழ்க அந்தணர் வானவ ரானினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல் லாமரன் நாமமே
சூழ்க வையக முந்துயர் தீர்கவே.

அம்மை யப்பர் அருளுக.






ஸ்ரீ ஜயலக்ஷ்மி அச்சகம், திருவண்ணாமலை. Q. H. 62.
C. 1000. 9-12-47.



உண்ணாமுலை யுமையாளொடு முடனாகிய வொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணி திகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைமுழ வதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ண மறுமே.